# கந்தன் புகழ் மாலை

# கந்தன் புகழ் மாலை

நீலா ராமமூர்த்தி

**நீலா பப்ளிகேஷன்ஸ்**
சீனிவாசன் தெரு, ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை-28.

முதற்பதிப்பு மே, 1967
உரிமை ஆசிரியருக்கு!

கந்தன் புகழ்மாலை பாடல்களை (ஸ்துதி மணி மாலை கிருஷ்ண பிரேம கானம் பக்திப் பாடல்கள் உள்பட) நடனம், நாடகம், கதை, ஒலிப்பதிவு முதலியவை மூலம் உபயோகிக்கும் இசையன்பர்கள், ஆசிரியரின் அனுமதி பெறக் கோரப்படுகிறது.

விலை ரூ. 1-00

அச்சிட்டோர்:
பாரதம் பிரஸ், 14, உஸ்மான் ரோடு,
சென்னை-17.

# சமர்ப்பணம்

எங்கும் நிறைந்த கந்தன் பெருமை
யையே பாடும் இசை அன்பர்களுக்கு
என்றே அமைந்த என் சிறு காணிக்கை.

# ஆசி நிறை உரை

ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி எனது ஆப்த நண்பர் ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களின் புதல்வி. அவர்களை வெகு சிறு வயதிலிருந்தே நன்கு அறிவேன்.

தந்தையாரை போலவே ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்களும் கடவுள் க்ருபையால் அருமையான ஸாகித்யங்களை பாவம் பூரிக்கும்படியான வர்ணமெட்டுகளில் அமைத்திருக்கிறார். ஸாஹித்யம் செய்வது அவருடைய குலதனமாக இருக்கிறதென்றால் மிகையாகாது.

ஏற்கனவே அநேக பாடல் வெளியிட்டிருக்கிறார்கள் இந்தக் 'கந்தன் புகழ்மாலை'யைப் பார்வையிட்டேன். ஸாஹித்ய அமைப்பும் ஸங்கீத சுவையும் வெகு அழகாக இருக்கிறது. பக்தியுடன் மனது உருகிப்பாடுவதற்கு இந்த ஸாஹித்யங்கள் விசேஷமாக அமைந்திருக்கின்றன.

முசிரி சுப்ரமண்ய அய்யர்

ஸ்துதி மணிமாலை க்ருஷ்ண பிரேமகானம் பக்தி பாடல்கள் முதலியவற்றின் மூலம் பெரும்புகழ்வாய்ந்தஸ்ரீமதி நீலா ராமமூர்த்தியின் கந்தன் புகழ் மாலையும் தனிச்சிறப்புடன் விளங்குகிறது. இவற்றிலுள்ள நாட்டிய நாடகங்களும் பாடல்களும் எல்லோராலும் விரும்பிப்போற்றத் தக்கதாக உள்ளது என்பதில் சந்தேகமே இல்லை.

இவரது தந்தையாரான ஸ்ரீ சிவன் அவர்களின் பாடல்கள் யாவுமே பக்திப் பூர்வமானது. அன்னாருடைய பூரண ஆசியுடன் இறைவனின் பேரருளும் சேர்ந்து நீலாவின் பாடல்களை ஜனரஞ்சகமாகவும் யாவரும்பாடி இன்புறும் வண்ணமும் செய்திருக்கிறது! என் அன்பிற்குகந்த நீலாவின் கலை உள்ளம் செழித்தோங்கித் தழைத்து, ஈசுவரானுகிரகத்திற்கு மேன்மேலும் பாத்திரமாக வேண்டுவதுடன்

# முன்னுரை

தமிழ் மிக மிகப் பழமையானது. எத்தனையோ பழந் தமிழ் நூல்கள் இப்போது நமக்குக் கிடைக்காவிட்டாலும், கிடைக்கும் நூல்களைக் கொண்டு தமிழின் பழமையை ஒருவாறு உணர முடிகிறது. வரையறையாகக் காலத்தைத் தெரிந்து சொல்ல உறுதியான ஆதாரங்கள் தெளிவாக இல்லை. அதனால் பழைய தமிழ் நூல்களின் காலம் இன்னதுதான் என்று திட்டமாகச் சொல்ல முடியவில்லை. கிடைக்கும் பழைய நூல்களுள் தொல்காப்பியம் மிகப் பழையதென்று பலரும் கருதுகிறார்கள். அது தோற்றிய காலம் இன்னதென்று நிறுவும் வகை தெரியாமல் ஆராய்ச்சிக்காரர்கள் திண்டாடுகிறார்கள். குத்து மதிப்பாக மூவாயிர வருஷங்களுக்கு முந்தியது, ஐயாயிரம் வருஷங்களுக்கு முந்தியது என்று சிலர் கூறுகிறார்கள். இன்னும் சிலர் சில சொற்களை வைத்துக்கொண்டு தொல்காப்பியர் அவ்வளவு பழமையானவரல்ல என்று சொல்கிறார்கள். தொல்காப்பியத்தின் பண்ணமைந்த கட்டுக்கோப்பையும் அதன்பால் உள்ள செய்திகளையும் பார்த்தால் அதற்கு முன் பல நூல்கள் தமிழில் இருந்திருக்கவேண்டும் என்று நிச்சயமாகக் கூறலாம். பல நூல்கள்—இலக்கியங்களும் இலக்கணங்களும்—வெளிவந்த பிறகே அத்தகைய அமைப்பையுடைய இலக்கணம் பிறக்க முடியும். அகத்தியம், மாபுராணம், பூத புராணம் முதலிய நூல்கள் இருந்தனவாகத் தெரிகின்றன. ஆனால் அவற்றின் தன்மையைத் தெளிவாக அறிவதற்குரிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

கவிஞரைக் கவிஞன் குறைதான் சொல்வான். நானும் கவிஞன்தானே! அந்தக் காய்ச்சல் இல்லாமலாபோகும்! பேனாவை எடுத்தேன்.

ஆனால் தேன்மழை பெய்யும் இப்பாடலில் நான் குறைகூற இயலவில்லை. ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி இசையுடன் பாடியபோது என் உள்ளம் உருகியது. குலவித்தை கல்லாமல் வரும் என்ற உண்மையை அவர் பாட்டில் கண்டேன்.

பாடல்கள் யாவும் என்நெஞ்சைக் கவருகின்றன. முருகன் அன்பர்களுக்கு இப் பாடல் ஓர் முத்துமாலையே. இத்துடன் "க்ருஷ்ணப்ரேம கானம், பக்திப் பாடல்கள்" என்ற தொகுப்புகளையும் பார்த்தேன் அருமையான பாடல்கள், பக்திச்சுவை சொட்டும் பாடல்கள், எளியவை, இனியவை— ஏன் இல்லாமல் இருக்கும்? பாபநாசம் சிவன் மகள் என்றால் பாடலை உரைத்துப் பார்க்கவா வேண்டும்?

**கொத்தமங்கலம் சுப்பு**

திருமதி நீலா இராமமூர்த்தி இசையுலகிற்குச் செய்து வரும் தொண்டு கலையுலகம் நன்கு அறிந்த ஒன்று. இசையாத மனத்தையும் இசைய வைக்கும் சக்தி இனிமையான இசைக்கு உண்டு. அந்த இசையை அருமையான தீந்தமிழ்ப் பாடல்களிலே கலந்து பக்தி பொங்க எழுதியும் பாடியும் பணிபுரிந்து வரும் இவர்தம் தொண்டு சிறந்து விளங்க இவர் நிறை புகழொடும் பொருளொடும் பக்தியோடும் நீடூழி வாழ திருமுருகன் அருள் புரிய வேண்டுகிறேன்.

அன்புள்ள

**சௌந்தரா கைலாசம்**

ஸ்ரீமதி நீலா ராமமூர்த்தி அவர்கள் புகழ் பெற்ற ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களின் புதல்வி. தகப்பனுரைப் போலவே எளிய நடையில், குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் ரசிக்கும்படியான தமிழ்ப் பாடல்களை இயற்றும் பாக்யத்தைப் பெறறிருக்கிருர். இவர் இதற்கு முன் இயற்றியுள்ள "ஸ்துதி மணிமாலை, பக்திப் பாடல்கள், என்ற புஸ்தகங்களைத் தொடர்ந்து "கந்தன் புகழ் மாலை" க்ருஷ்ண பிரேம சானம் என்ற புஸ்தகத்தை வெளியிட்டிருக்கிருர். இதில் அமைந்துள்ள பாடல்கள் சச்சேரிகளிலும், நாட்டியங்களிலும், இசை நாடகங்களிலும் பாடக்கூடிய அளவில், அவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது. கலை உலகிற்கு இந்தப் புஸ்தகம் மிகவும் பயன்படுமென்று பூரணமாய் நம்புகிறேன். கந்தப் பெருமான், அவர்களுக்கு ஸகல பாக்யங்களையும் அருள வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

A S பஞ்சாபகேசன்

# முன்னுரை

எங்கும் நிறைந்து எல்லாம் அறிந்த கந்தன் புகழ் அளவில் அடங்காதது. அந்த ஆண்டவனுக்கே அர்ப்பணமாக நான் புனைந்துள்ள சில பாடல்களுடன் கூடிய இந்த "கந்தன் புகழ்மாலை"யில் பிழை பல இருப்பினும் பொருட்படுத்தாது இசை உலகு ஏற்க வேண்டும் என்ற ப்ரார்த்தனையுடன், இச்சிறு நூல் வெளிவரப் பெரிதும் உதவிய பரணி ஆசிரியர் திரு. சேத்தூர் கூத்தன் அவர்களுக்கும், பாரதம் அச்சகத்தாருக்கும், தம் ஆசியுரை மூலம் என் பணி மேன் மேலும் சிறக்க உதவிய அரும்பெரும் இசைமேதைகளுக்கும் என் மனமார்ந்த நன்றி விசுவாசத்தைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீலா ராமமூர்த்தி

# அட்டவணை

| எண் | பெயர் | ராகம் | தாளம் |
|---|---|---|---|
| 1. | கோல மயில் | ஹம்ஸநாதம் | ஆதி |
| 2. | சரவணபவா | ஹிந்தோளம் | தேசாதி |
| 3. | முருகா ஷண்முக | சாரமதி | ஆதி |
| 4. | குமர குருபரனே | கரகரப்ரியா | ,, |
| 5. | வேலவனே | சாருகேசி | ,, |
| 6. | அடைக்கலம் | ஹம்ஸானந்தி | ,, |
| 7. | கதிர் காம | நடபைரவி | ,, |
| 8. | முருகன் அருள் | துர்கா | ,, |
| 9. | திருப்பரங்கிரி | ஹேமவதி | ,, |
| 10. | நீ ஒரு வரம் | தோடி | ,, |
| 11. | தென் பழனி | கேதார கௌளை | ,, |
| 12. | ஆண்டியாகி | ஷண்முகப்ரியா | ,, |
| 13. | சிக்கல் | கல்யாணி | ,, |
| 14. | கந்தா உன் | வசந்தா | ,, |
| 15. | செந்திலம்பதி | பாகேசுவரி | ,, |
| 16. | ஒரு கணையும் | சுப பந்து வராளி | ,, |
| 17. | திருவேரக | கீரவாணி | தேசாதி |
| 18. | மயிலேறும் | புன்னாக வராளி | ரூபகம் |
| 19. | முத்து குமரன் | காபி | ,, |
| 20. | மனம் போன | சஹானா | ஆதி |
| 21. | சிந்தனை | மாயாமாளவம் | ரூபகம் |
| 22. | சொல்லி சொல்லி | சாமா | ஆதி |
| 23. | மனதை அடக்க | சரசுவதி | ,, |
| 24. | சொன்னதெல்லாம் | யதுகுலகாம்போதி | ,, |
| 25. | சன்னிதியில் | விஜய நாகரி | ,, |
| 26. | பழனி ஆண்டவன் | நாத நாமக்ரியா | ,, |
| 27. | உள்ளப்போதே | யமுனா கல்யாணி | ,, |

| | | | |
|---|---|---|---|
| 28. | வன்ன மயில் | கௌரி மனோகரி | ,, |
| 29 | அவசியம் | கேதாரம் | ,, |
| 30. | ஸ்வாமியை | உசேனி | சாபு |
| 31. | ஆடிப்பாடி | நாட்டைக் குறிஞ்சி | ரூபகம் |
| 32. | உனக்கும் எனக்கும் | கானடா | ஆதி |
| 33. | மணமிகு | சந்திர கௌஸ் | ,, |
| 34. | விரைந்தோடி | ராகமாலிகை | ,, |
| 35. | வராததேனோ | கீரவாணி | ,, |
| 36. | ஆனாலும் உனக்கிது | பைரவி | ,, |
| 37. | கண் முன்னே | ஜெயந்தஸ்ரீ | ரூபகம் |
| 38. | வருவார் என்று | சுத்த தன்யாசி | ஆதி |
| 39. | என்னவென்று | ஆபேரி | ,, |
| 40. | உன்னை காணும் | சிந்து பைரவி | ,, |
| 41. | நீல நதிக்கரை | செஞ்சுருட்டி | ,, |
| 42. | வருவாய் முருகா | திலங் | ,, |
| 43. | எத்தனை நாளினி | ரஞ்சனி | ,, |
| 44. | வேலனைக் கண்டேன் | பரசு | ,, |
| 45. | மனமடங்க வழி | பௌளி | ,, |
| 46. | எட்டுமிரண்டறியா | ஆபோகி | ,, |
| 47. | சரவணப் பொய்கை | பீலு | ,, |
| 48. | கந்தன் திருப்பெயர் | கன்னடா | ,, |
| 49. | எல்லோரும் | சாரங் | ,, |
| 50. | வரமருள் சிவன் | பூரி கல்யாணி | ,, |

**வள்ளி நாட்டிய நாடகப் பாடல்**

ராகம்—ஹம்ஸநாதம் தாளம்—ஆதி

கோல மயில் ஏறி வரும் குமரனைக் கண்டேன்
குறுநகை தவழ்மதி வதனனைக் கண்டேன்
ஆலம் உண்ட சிவன் பாலனைக் கண்டேன்
அறுமுக வடிவுடை [illegible]னைக் கண்டேன்
மாமணியினைத் தேடிய [illegible] கண்டேன்
மனமகிழ்ந்தானந்த வாழ்வையும் கண்டேன்
தேனும் தினை அளித்த வள்ளியைக் கண்டேன்
திருவுருவாய் இருவர் கலந்திடக் கண்டேன்

ராகம்—ஹிந்தோளம் தாளம்—தேசாதி

பல்லவி

சரவண பவா கருணை புரிவாய் (ச)

அனுபல்லவி

அரனும் மகிழ அழகு மயிலில்
அனவரதமும் அமர்ந்திருக்கும் ஸ்ரீ (ச)

சரணம்

ஸ்வாமிநாதா சரணம் சரணம்
சகல லோகாதார சரணம்
காமனை ஓர் கண்ணால் எரித்த
கயிலைப் பதிக்கே குருவும் ஆன (ச)

3

ராகம்—சாரு, மதி தாளம்—ஆதி

பல்லவி

முருகா ஷண்முக வேலவா தயாகரா (மு)

அனுபல்லவி

திருமாலின் மருகா உன் கருணை இருந்திடில்
தமியேனும் கடைத்தேற ஏதுவும் ஆகுமே (மு)

சரணம்

குறமாதின் மணவாள குகனே திருப்பரங்
குன்றம் குடிதனில் வாழும் விசாகனே
சிறியேன் என் வினை தீர சிந்தை குறையற
சிவ பாலனே எனக்கருள் வாய் வடிவேல் (மு)

ராகம்—கரகரப்ரியா தாளம்—

பல்லவி

குமரகுரு பரனே வந்தருள் (கு)

அனுபல்லவி

குமரகுரு பரனே குஞ்சரி பாலனே
குக சரவணனே உன்பதம் சரணம் (கு)

சரணம்

புரமெரித்தவன சிவன் புதல்வனே கந்தனே
புகல் எனக்கு உந்தன் திருவடியே
கரிராஜனுக் கபயம் தந்தவன் மருகனே
கருணையுடன் உனதருள் தரவே திரு (கு)

ராகம்—சாருகேசி தாளம்—ஆதி

பல்லவி

வேலவனே விரைந்துவா அந்த
கோலக் குறவள்ளி தெய்வ யானையுடனே (வே)

அனுபல்லவி

நீலகண்டன் பெற்ற சீலத்திரு மகனே
நிஜமனதுடனே அழைக்கின்றேன் உன்னையே (வே)

சரணம்

சரவண பவனே ஷண்முக நாதனே
சக்தி வடிவேலனே சித்தம் இரங்கி அருள்வாய்
பரம கிருபாகரனே பன்னிருகையனே
பக்தியுடனே உன்னை பணிந்திடுறேன் வடி (வே)

6

ராகம்—ஹம்ஸானந்தி தாளம்—ஆதி

பல்லவி

அடைக்கலம் என்றே வந்தோர்கருள் தரும் ஐயனே
அறுமுக வேலனே குருபரனே குகனே (அ)

### அனுபல்லவி

இடையறாது உந்தன் பேரருள் தன்னைப் பாடி
இசையுடன் போற்றவே எனக்கருள்வாய் என்றும் (அ)

### சரணம்

குறமகள் வள்ளி லோலா முருக சரவண பவா
குன்றுதோறும் நின்று விளையாடும் குமரா வா
இறைவனே ஷண்முகனே என்னையாள வேண்டும் நீ
இரும்பவக் கடல் தாண்டிட ஏழை நான் உய்வேன் (அ)

ராகம்—நடபைரவி தாளம்—ஆதி

கதிர் காமக் கந்தனுக்குத்தன்
சரணம் எல்லாம் நன நெஞ்சே
கன்னி வள்ளி அழகனுக்குன
சரணமெல்லாம் நன நெஞ்சே
திருத்தணி வேலனுக்குதன
சரணமெல்லாம் நன நெஞ்சே
தேவயானை பாகனுக்குன
சரணமெல்லாம் நன நெஞ்சே

ராகம்—துர்கா தாளம்—ஆதி

முருகன் அருள்புரிவான் திருமால்
மருகன் அருள்புரிவான் மனமே (மு)
பரமசிவன் மகிழ் பாலசுப்ரமணியன்
பன்னிருகை அழகன் வடிவேல் (மு)

சரவணபவ சிவ ஷண்முகநாதனின்
சரணங்களை பணிந்தால் நலமே (பு)
ஒருகணமாகிலும் நினைந்தவர் உள்ளத்தில்
உறைந்தின்பமே தருவான் நிஜமே (பு)

ராகம்—ஹேமவதி தாளம்—ஆதி

### பல்லவி

திருப்பரங்கிரி நாதா உன்
தரிசனம் தரலாதா இப்போதே (தி)

### அனுபல்லவி

விருப்பமுடன் உன்னை வேண்டியே போற்றினேன்
வலங்கை ஒத்த வாழ்வில் உழலும் நான் கடைத்
தேற (தி)

### சரணம்

சேவல் கொடிக் கொண்டவனே செந்தில் பதி நாயகனே
செம்பவள வாயனே அம்பிகை குமாரனே
தேவர் சிறை மீட்டவனே தேவானை மணாளனே
தேடி உன்னை நாடி வந்தேனை குமரனே நீ அருள்வாய் (தி)

10

ராகம்—தோடி தாளம்—ஆதி

### பல்லவி

நீ ஒரு வரம் தருவாய் முத்துகுமரா (நீ)

அனுபல்லவி

தீன தயாளனே ஞான முதல்வனே
தேவர் சிகாமணியே தண்டபாணி தெய்வமே (நீ)

சரணம்

கனக மயில் அமரும் கமல முகத்தழகா
கருணையுடன் என்னை காத்திடுவாயே
மனம் என்றும் உனதரும் பதந்தன்னையே நினைந்து
அனவரதம் பணிந்தின்புறவே எனக்கு (நீ)

11

ராகம்—கேதார—கௌளம் தாளம்—ஆதி

பல்லவி

தென் பழனி வேலவனே வள்ளி அம்மை நாயகனே
என்றனுக்கருள் குகனே கந்தனே தயாபரனே (தெ)

அனுபல்லவி

அன்னை உமையாள் மகனே ஆறுமுகமானவனே
ஐங்கரனின் சோதரனே எங்கும் நிறை பூரணனே (தெ)

சரணம்

அன்பர் உள்ளம் வாழ்பவனே அன்பு மயமானவனே
அச்சுதன் மருமகனே பச்சை மயில் வாகனனே
இன்பம் எல்லாம் தருபவனே துன்பமெல்லாம்
தவிர்ப்பவனே உன்
இணையடி மறவேனே அனுதினம் பணிவேனே (தென்)

12

ராகம்—ஷண்முகப்ரியா தாளம்—ஆதி

பல்லவி

ஆண்டியாகி குன்றுதோறும் நின்றவனே ஷண்முகனே
என்னை
ஆண்டுக் கொள்ள வரும் அந்த நாளும் எந்த
நாளோ (ஆ)

அனுபல்லவி

தூண்டா மணி விளக்கே தென் பழனி வேலவனே
தெய்வ யானை வள்ளிமகிழ் நாயகனே நீ
அருள்வாய் (ஆ)

சரணம்

கூண்டு கிளியினைப்போல் உள்ளமெல்லாம் நொந்தேன்
குல தெய்வமான உன்னைக் காணக் கிடைக்காமலே
வேண்டும் முன்னே வந்துவரமருளும் குமரா
வருந்த விடல் உனக்கு நியாயமோ ஐயா (ஆ)

13

ராகம்—கல்யாணி தாளம்—ஆதி

பல்லவி

சிக்கல் சிங்கார வேலனே சிவ பாலனே என்
சிந்தை தனில் வாழும் ஸ்ரீ சுப்ரமண்யனே (சி)

அநுபல்லவி

எக்காலத்திலும் உன்னை எண்ணி துதிக்கவே
என் ஸ்வாமியே அருள் எங்கும் நிறைந்தவனே (சி)

சரணம்

கதிர் காம கந்தனே கண் கண்ட தெய்வமே
கற்பனைக்கு எட்டாத கருணை விலாசனே
பதி தோறும் அமர்ந்தவனே பக்தர் உள்ளம்
கொண்டவனே
பன்னிருகையனே பங்கஜத்தாளனே (சி)

14

ராகம்—வசந்தா    தாளம்—ஆதி

பல்லவி

கந்தா உன் கழல் தன்னையே பணிய அருள் (க)

அநுபல்லவி

எந்தாய் உன்னை நினைந்து எப்போதும் மனத்திடையே
இந்தா இந்தா என்றுன் தண்ணருளே தரும் (க)

சரணம்

தந்தோம் தகிட திமி என்றே நடம் புரியும்
தில்லை யம்பலவாணன் அன்பில் உறைந்திடும்
செந்தில் குமாரனே சிங்கார வேலனே என்
சிந்தை குடிகொண்ட தேவாதி தேவனே (க)

## கந்தன் புகழ் மாலை

பல்லவி

ராகம்—பாகேசுவரி தாளம்—ஆதி

செந்திலம் பதி வாழும் சுந்தர வடிவேலா
எந்தனுக்கு இந்த வரம் தந்தருள்வாயே திருச் (செ)

அனுபல்லவி

சந்ததமாய் கந்தன் சன்னிதியில் நின்று
வந்தனையும் செய்தே மெய்யாக பாடிடுவேன் (செ)

சரணம்

பந்தமும் சொந்தமும் பாசமும் நேசமும்
பலத்த சுமையாக் கொண்டு என்னைப் பிணைத்திடுதே
சிந்தை எல்லாம் எங்கோ சுற்றி அலையுதே
சித்தம் வைத்து என்னை காத்திட வேண்டும் நீ (செ)

16

ராகம்—சுப பந்துவராளி தாளம்—ஆதி

ஒருக்கணமும் மறவாமல் நினைத்திடுவோர்க்கெல்லாம்
உள்ளம் பாடி வருகுவமே உமையவளின் பாலா
திருச்செந்தூர் தென்பழனி அழகர்மலை உறையும
தேவயானை வள்ளியம்மை அன்பு மணவாளா
பால்காவடி பன்னீர் காவடி எடுத்துவரும் அன்பர்
பக்தியில் லயித்து பதம் தந்தருளும் சீலா
வேல்முருகா என்மேல் இரங்கி வந்தருள் தயாளா
வருந்த விடாமல் எனக்கும் உன்னருளே புரிவாய்

17

இராகம்—கீரவாணி தாளம்—ஆதி

பல்லவி

திருவேரக பெருமான் அருள்வான்
வருந்தாதிருந்தே வாழி என் நெஞ்சமே (தி)

அனுபல்லவி

முருகன் குகன் வடிவேலவன்
முன்னர் யாம்செய்த நல்வினைப்பயனாக (தி)

சரணம்

பரிவாக உந்தன் அருகில் வருவான்
பதம் பணிந்தே நீ துதி செய்குவாய்
கருணாகரன் மயில் வாகனன்
குமரன் இருக்க குறையேதும் உண்டோ (தி)

18

இராகம்—புன்னாக வராளி தாளம—ஆதி

பல்லவி

மயிலேறும் முருகா என் மனம் வந்த குமரா (ம)

சரணங்கள்

கயிலேந்திரன் பெற்ற சிங்கார வேலா
ஒயிலான குற வள்ளி மகிழும் மணாளா (ம)
உன்னை நம்பும் என் போன்றோர்க்கிரங்கி அருளும்
இனிதான உள்ளம் கொண்ட கருணா சமுத்ரா (ம)

பவலந்த வினை தீர்க்கும் பழனி மலை நாதா
அவமாயை அகற்றி அருள் மழையே பொழியும் (ம)

19

ராகம்—காபி தாளம்—ஆதி

முத்து குமரன் சித்தம் உவந்தால்
நித்தம் நலமே நீ பாடு நெஞ்சே
அத்தன் சிவன் கங்காதரன் பெற்ற
பெருமானுக் கிணையான தெய்வம் இல்லை
பக்தர் மனத்திலே இருந்தென்னாளும் நற்
பயனும் தருவான் வேலன் அவன்
சித்தம் எல்லாம் அந்த தெய்வத்திடம் வைத்து
சீருடன் உயர பாடு நெஞ்சே

20

ராகம்—சகானா தாளம்—ஆதி

மனமபோனப் போக்கெல்லாம்
போகாதே பெண்ணே அந்த
மாயை வசப்பட்டு உழலாதே கண்ணே
கணமேனும் நினையாமல்
மந்திபோல் பெண்ணே
பாய்ந்தோடும் எங்கெங்கோ ஆதலால் கண்ணே
உண்மையில் நலம் தந்து
காப்பது பெண்ணே அந்த
வடிவேலன் திருநாமம் ஒன்றுதான் கண்ணே
நன்மையும் தீமையும்
அவன் செயல் பெண்ணே
உன்னுள்ளம் தன்னில் பக்தியும் வேண்டும் என் கண்ணே

## 21

**ராகம்—மாயா மாளவம்** **தாளம்—ரூபகம்**

### பல்லவி

சிந்தனை செய்வாயே கந்தன் பதம்
தன்னைப் பணிவாயே மனமே (சி)

### அனுபல்லவி

சொந்தம் என்று வரும் பந்தம் எல்லாம் வெறும்
மாயச்சுழல் என்று நீ உணர்ந்தாகிலும் (சி)

### சரணம்

காசு பணம் இருந்தால் உலகிலே நேசிப்பவர் உண்டு
கட்டினவளும் கூட அது இல்லை எனில் எட்டி நடந்திடு
[வாள்
ஆசையும் பாசமும் ஈசனிடம் வைத்தால்
ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்து மகிழுவாய் (சி)

**ராகம்—சாமா** **தாளம்—ஆதி**

சொல்லிச் சொல்லித் தினம் பாடுவாய் அந்த
வள்ளலை வேலவன் தன் புகழை
நல்லவர் மனதில் நாளும் இருந்து நற்
பயனும் தருவானே தயாளனை
வண்ண மயிலேறி வந்திடுவான் நம்மை
வாழ்த்தி அருளும் தந்திடுவானே
அன்னையைப் போலவே இன்பத் துன்பங்களில்
ஆறுதல் சொல்லியே தேற்றிடுவான்
பச்சை மயிலிலே இச்சையுடன் வந்த

சன்னிதியில் வந்து என்னேரமும் பாடி
உன்னருள் தன்னையே தேடுவேனே
தென்பழனி திருச்செந்தூரில் வாழும் உன்
தரிசனம் காணவும் செய்வேனே என்
ஜன்மமும் ஈடேற பேரின்ப வாரியில்
சிறியேனும் திளைத்துள்ளம் மகிழ்வேனே
[நல்லோர் (செ)

ராகம்—விஜய நாகரி தாளம்—ஆதி

சன்னிதியில் வந்து நின்றும் ஷண்முக நாதா
உன் நினைவும் வரவில்லையே ஷண்முகநாதா
வண்ணமயில் மீதிருக்கும் ஷண்முகநாதா என்னை
வாழ்த்தவும் நீ வருவாயோ ஷண்முகநாதா
சின்னமனம் திரியுதெங்கோ ஷண்முகநாதா அதை
சரிப்படுத்தி வழிப் படவை ஷண்முகநாதா
புன்னகையோடென்னைப் பார்க்கும் ஷண்முக நாதா
இந்த
பித்தனையும் வாழ வைப்பாய் ஷண்முகநாதா

26

ராகம்—நாதநாமக்ரியா தாளம்—ஆதி

பழனி ஆண்டவன் புகழைப் பாடார்
உலகில் உண்டோ சொல்லம்மா
பணிந்தவன் பதமே நினைந்தவன் அருளே
அடையாதார் யார் சொல்லம்மா
அலையென சுழன்று நிலையின்றிப் போகும்
அவனியில் எல்லாம் சொல்லம்மா

மலைமகள் ஈன்ற சரவணன் துணையே
மனதிற்கு இதமே சொல்லம்மா

ராகம்—யமுனகல்யாணி தாளம்—ஆதி

உள்ளப் போதே நல்லதை நீ எண்ணு எந்தன் மனமே
உனக்
கானந்தம் வரும் அதில்தான் எந்தன் மனமே (உ)

வள்ளிமணவாளன் பேரை சொல்லி நிதம் பாடினால்
அள்ளக் குறையாத அருட் செல்வ மதையே
திருவான் (உ)

எண்ணி எண்ணிப் பார்க்கும் போது என்ன வரும்
வாழ்விலே
கண்ணில் வந்து போனதெல்லாம் காக்ஷிதருமோ
நீ சொல் (உ)

கள்ளமில்லா உள்ளத்தையே கொள்ளும் அந்தப்
பெருமான்
புள்ளி மயிலோன் உனது கண்முன் வந்து
அருள்வான் (உ)

28

ராகம்—கௌரி மனோகரி தாளம்—ஆதி

பல்லவி

வண்ண மயில் ஏறி வா வா வடி
வேலவனே திருப்பரங்குன்றம் வாழ்பவனே (வ)

அனுபல்லவி

இன்பமுறுடைய [illegible] உள்ளம் இனித்திடவே செய்து
இணை பிரியாமலே எந்தன் முன்னே வந்து [illegible] (வ)

சரணம்

பன்னிரு தோளுடையா பரிவுடனே அருள
பரம தயாகரனே விரைந்து நீ வா வா
உனையே நினைந்துருகி நின்றேன் [illegible]
உடையவா பாலனை [illegible] (வ)

29

ராகம்—கேதாரம தாளம்—ஆதி

பல்லவி

அவசியம வர வேண்டும் செந்தில் வளர் கந்த
ஸ்வாமியே (அ)

அனுபல்லவி

அவசியம் வந்து எந்தன் அகம் குளிர்ந்திட ஒரு
வார்த்தை சொல்லி துயர் தீர்த்திடவாகிலும் (அ)

சரணம்

வந்து வந்து அன்பு மொழி பேசியதெல்லாம மறந்து
சிந்தைதன்னை எங்கோ விட்டு ஏழை என்னையே பிரிந்தீர்
சந்திரனை சாக்ஷி வைத்து தந்திரமாய் மாலையிட்ட
விந்தை தனை ஒரு தரம் எண்ணியே பார்த்திட (அ)

30

ராகம்—உசேனி தாளம்—சாபு

பல்லவி

ஸ்வாமியை அழைத்து வாடி சகியே
சமயம் இது அறிவாய் கந்த (ஸ்)

அநுபல்லவி

ஸ்வாமி மலையில் வாழும் ஷண்முக நாதனை
சந்திரகலாதரன் பெற்ற ஸ்ரீ குமார (ஸ்)

சரணம்

நீல மயிலில் வந்தென் நெஞ்சினில் இடம் கொண்டு
நேய மொழி பகன்று மாயமாய் மறைந்தானை
பாலாபிஷேகப்ரியன் பக்தர்கனுகூலனை
பால சுப்ரமண்யன் பன்னிருகையன் (ஸ்)

31

ராகம்—நாட்டைக் குறிஞ்சி தாளம்—ரூபகம்

பல்லவி

ஆடிப்பாடி நிற்க நேரம் இல்லை அந்த
ஆறுமுகன் வரும் வேளையிதே சகி (ஆ)

அனுபல்லவி

சூட மலர் கொண்டு வாடி எந்தன் சகி
சுப்ரமண்யன் திரு மார்பினில் போடவே (ஆ)

சரணம்

மாயக் குறத்தியின் மையலிலே சிக்கி
மாது என்னை மறந்தின்னுள் இருந்தவன்
நேயமுடன் வருவேன் என்று உரைத்தானே
நிச்சயமாகவே வந்திடுவான் இன்று (ஆ)

32

ராகம்—கானடா தாளம்—ஆதி

உனக்கும் எனக்கும் இருக்கும் பொருத்தம்
என்ன சொல்லையா வேலய்யா
நினைக்கும் போது வந்து நீயும்
சிரிப்பதேனைய்யா முத்தைய்யா என்
மனதை விட்டு மறைந்திடாமல்
இருப்பதேனைய்யா கந்தையா
உன்னை நம்பி என்னை தந்தால்
ஓடிடுவாயையா சொல்லைய்யா
வன்னக் குறப் பெண் வள்ளி உன்னை
விட்டிடுவாளோ குமரைய்யா
என்னுள்ளத்திலே நீயும் என்றும்
இருக்கிறாய் போதும் செல்லையா

33

ராகம்—சந்திரகௌஸ் தாளம்—ஆதி

பல்லவி

மணமிகு மலரே நீ சென்று வா என்
மனதில் அமைதியும் பெறவே ஒரு திரம் (ம)

### அனுபல்லவி

டனது இதழ்களில் ஒவ்வொன்றையும் விரும்பும்
ரனது அன்பர் வரும் வழி இன்னும் காணேன் (ம)

### சரணம்

அழகிலும் அறிவிலும் புகழிலும் பேரிலும்
அவருக்கிணை இங்கு யாரும் இல்லை
முல் பணிந்தோர் கெல்லாம் கருணை மழைபொழியும்
ந்தனே என் உள்ளம் கவர்ந்த நற் கள்வனே (ம)

## 34

ாகம்—ராகமாலிகை தாளம்—ஆதி

### தோடி

ிரைந்தோடி வா நீ தோழி வடி
வேலழகன் முருகன் தன்னைக் கண்டு (வி)

### மோகனம்

ன மோகனன் வந்து வெகு நாளும் ஆச்சுது
னதுள்ளம் நைந்துருகி ஏங்கியே போச்சுது (வி)

### கல்யாணி

தன கல்யாணி என் மனதைக் கொள்ளைக் கொண்ட
திக் கென் நினைவின்னும் வாராததும் என்ன (வி)

### காபி

ரு நாளும் மறவேன் என்று உறுதியுடன் சொல்லி
ரிவாக அணைந்தார் என் காபி விலாசினி (வி)

35

ராகம்—கீரவாணி  தாளம்—ஆதி

பல்லவி

வராததேனோ வேலவா வரம்
தராததேனோ வேலவா இன்னும் (வ)

அனுபல்லவி

பாராமுகம் இது தகுமோ குகனே
பாலித்தாள்வதும் உன் கடனே (வ)

சரணம்

சுரா சுரர்தொழும் உன் பதம் தன்னையே
இரவிலும் பகலிலும் என்றும் நினைந்தேன்
சராசரம் பணி சரவணபவனே
காரணம் நான் அறியேன் நீயும் (வ)

36

ராகம்—பைரவி  தாளம்—ஆதி

பல்லவி

ஆனாலும் உனக்கு இது ஆகாது கண்ணே
ஆசைக்கும் அளவு உண்டு அடியே பெண்ணே (ஆ)

அனுபல்லவி

சொன்னால் நகைப்பாரே பின்னால் சிரிப்பாரே கந்தன்
சொந்தம் என்ற எண்ணத்தையே கொள்ளுவது
நியாயம் அல்ல (ஆ)

சரணம்

சின்ன பெண்ணை கண்டுவிட்டால் சிரிப்பதும் பார்ப்பதும்
சிங்காரமாய் பேசுவதும் அவன் வழக்கம் அன்றோ
பின்னால் வருந்த விட்டு தன்னால் மறைந்துவிடும்
மன்னாதி மன்னனடி மாது நீயும் ஏங்கலாமோ (ஆ)

மத்திம காலம்

மண் குடிலும் மாளிகையும் ஒன்று ஆகுமோடி அம்மா
மாலையிட உனக்கொரு மார சுந்தரன் வருவான்
எண்ணியதெல்லாம் மறந்து இன்பமாகவே இருப்பாய்
எனக்கு ஒரு தோழி சொன்னாள் என்று அப்போ நீ
சிரிப்பாய் (ஆ)

37

ராகம்—மாயாமாளவம் தாளம்—ரூபகம்

கண்முன்னே வாராணோ கன்னி எனக்
கானந்தம் தாராணோ முருகன் (க)

அனுபல்லவி

தையல் வள்ளி மகிழ் தெய்வ யானை புகழ்
தேவர் சிறை மீட்ட தீனதயாளன் என் (க)

சரணம்

அன்றென்னை தேடி வந்தான் அன்பு மொழி
பேசி மயக்கி நின்றான்
தன்னை மறந்தேனே உடன் அவன்
மின்னலென மறைந்தான்
என்றும் அவன் திரு நாமம் தன்னை எண்ணி
ஏங்கும் இந்த ஏழை உள்ளம் மகிழ்ந்திட (க)

38

ராகம்—சுத்த தன்யாசி தாளம்—ஆதி

பல்லவி

வருவார் என்று எதிர் பார்த்து இருந்தேன் இந்நாள்
வரை
வடிவேலன் சிவபாலன் எனதில்லம் தேடி (வ)

அனுபல்லவி

பரிவாய் அன்ெருரு நாள் என் கனவினிலே வந்தான்
பாலோடும் கனியோடும் உபசாரம் செய்தேன்
என்றும் (வ)

சரணம்

யாரும் கண்டறியாத பேரும் பெற்ரேம் என்று
அகம் தனிலே பெருமிதம் கொண்டேன் பேதை நான்
ஊரும் நகைத்திடவே உற்ருரும் பேசிடவே
உன் மத்தம் ஆனவள் போல் நலிந்தேன் மனம்
உடைந்தேன் (வ)

39

ராகம்—ஆபேரி தாளம்—ஆதி

பல்லவி

என்ன வென்றுனக்குரைப்பேன் தோழி நான்
எதென்று உனக்குரைப் பேன் இன்னும் (எ)

அனுபல்லவி

சொன்ன சொல் மறந்தாரோ சோதிக்க நினைந்தாரோ
சின்ன சொல்லும் எந்தன் செவியை துளைக்குதடி (எ)

சரணம்

மன்னவன் வந்தென்னை மருவி அணைந்தப் போது
என்னையும் இந்த புவி தன்னையும் மறந்தேன்
பன்னிருகை வேலவன் என்னை விட்டு போனவன்
இன்னும் வரக் காணேன் என்று ஏங்குறேன்
வாடுறேன் (எ)

40

ராகம்—சிந்துபைரவி தாளம்—ஆதி

உன்னைக் காணும் நாளும் என்றோ
என் வாழ்வில் மகிழ்வும் உண்டோ (உ)

நினைவேதும் உனக்கில்லையோ
வினை ஏதும் நானறியேன்
இனியேனும் வந்திடைய்யா
மனமே தான் சோருதைய்யா (உ)

மயில் ஏறும் வேலவனே
உனதுள்ளம் கல்தானோ
ஒயிலான வள்ளி தந்த
மயக்கம் மறைத்திடுதோ (உ)

41

ராகம்—செஞ்சுருட்டி தாளம்—ஆதி

நீல நதிக் கரை ஓரத்திலே அம்மா
கோலக் கிளி மொழி மாதொருத்தி
காலம் எல்லாம் தவம் செய்திடுறாள் அந்த
வேலன் முருகனை நோக்கியே தான்
தேனோடு நற்தினை மாவும் தந்த அந்த
மானோடவன் போது போகுதோடி

ஏனோடி அவள் இன்னும் ஏங்குகிறாள்
வீணாகி போகுமோ அவள் எண்ணம்தான்

42

ராகம்—திலங் தாளம்—ஆதி

வருவாய் முருகா வருவாய் வடி
வேலவனே வருவாய் விரைந்தே (வ)

பரமனருள் பாலா பழனி மலை நாதா
பக்தர்களுனா குகனே தயாகரனே (வ)

வள்ளி மணவாளா புள்ளி மயில் ஏறும் உன்
வண்ண மலர் பதமே பணிந்தேன் (வ)

ஆறுமுக மானவனே ஆண்டவனே ஷண்முகனே
அன்புடனே எனக்கருள விரைந்தே (வ)

43

ராகம்—ரஞ்சனி தாளம்—ஆதி

பல்லவி

எத்தனை நாளினி ஆகுமோ ஐயா
ஏழையென் மேடை இன்னருள் தான் பெற (எ)

அனுபல்லவி

சித்தம் எல்லாம் உன் பால் வைத்து விட்டே நானும்
பித்தனைப் போலவே திரிந்திடுகிறேன் இங்கு (எ)

சரணம்

பழம் உதிர் சோலையிலே பார்த்த நாள் முதலாக
அழகிய உன் முக நினைவின்றி வேறு இல்லை

குழல் இசைத்தோன் மருகா குமர குருபரா
அழிவில்லா உன் பதமே அடியனுக்கே தர (எ)

44

ராகம்—பரசு தாளம்—ஆதி

பல்லவி

வேலனைக் கண்டேன் சகி சிவ
பாலனைக் கண்டேன் சகி வடி (வே)

சரணங்கள்

காலக் குறத்தி வள்ளி மண
வாளன் முருகன் குகன் என்னை
காணவே வந்தானடி பல
லீலை புரிந்தானடி வடி (வே)

கண்ணே என் கண் மணியே உன்னை
கணமும் பிரியேன் என்றான் அந்தக்
கனவும் நினைவாகுமோ எந்தன்
மனமும் மகிழ்வுறுமோ வடி (வே)

45

ராகம்—பௌளி தாளம்—ஆதி

மனம் அடங்க வழி இருந்தும் செந்தில் வேலாமதி
மோசம் போனேன் பேதைபோலே செந்தில் வேலா
உன்னை மறந்துலகில் வாழ்ந்தேன் செந்தில் வேலா
உன் மத்தனைப்போல் அலைந்தேன் செந்தில் வேலா
கனவில் வந்து காக்ஷி தந்தும் செந்தில் வேலா உன்
கருணை அறியாதிருந்தேன் செந்தில் வேலா

இருந்தும் என்னையாள வரும் செந்தில் வேலா உன்
இணையில்லாத பதம் அருள் நீ செந்தில் வேலா

46

ராகம்—ஆபோகி தாளம்—ஆதி

பல்லவி

எட்டும் இரண்டறியா ஏழை என்னைக் காண
எங்கிருந்தோ வந்தான் கந்தன் (எ)

அனுபல்லவி

மட்டில்லாத ஆசைக்கொண்டு கிட்ட வந்து நின்றான்
மானே தேனே நீயே எந்தன் உயிர் என்றணைக்க
வந்தான் (எ)

சரணம்

தாகம் சகியேன் என்றான் தள்ளாடி
விழுந்தெழுந்தான்
தொண்டு கிழமாக வேடம் கொண்டு விளையாடினான்
மோகம் தலைக்கேறினாற் போல் நாடகமும் ஆடினான்
முடிவில் அவனை நான் முருகன் என அறிந்தேன் (எ)

47

ராகம்—பீலு தாளம்—ஆதி

சரவணப் பொய்கையிலே உதித்தவனே சரணம்
சகலமும் ஆனவனே ஷண்முகனே சரணம்
அரவணை துயில்பவன் மருகனே சரணம்
அடியவர்கருள் தரும் ஐயனே சரணம்

பரமனுக்குபதேசம் செய்தவனே சரணம்
பன்னிருகை அழகனே வேலனே சரணம்
ப்ரணவப் பொருள் உரைத்த முருகனே சரணம்
புள்ளிக்கலாப மயில் அமர்பவனே சரணம்

48

ராமம்—கன்னடா தாளம்—ஆதி

கந்தன் திருப் பெயரை கேட்டதும் உள்ளம்
களித்துக் கூத்தாடுதடி தோழி (க)

சரணங்கள்

வந்தனை செய்தோரை வாழ்த்திடும் குமரனிடம்
சொந்தம் கொண்டாலே துடிக்குதடி நெஞ்சம் (க)

எந்தப் பிறவியிலும் கிடைத்தற்கரிதான
இந்த நற்பேர் எனக்கு கிட்டுமோ சொல் தோழி (க)

பந்தமில்லாவிடினும் சொந்தமில்லாவிடினும்
சுந்தர வேலன் என் சிந்தைக்குகந்தவனே (க)

49

ராகம்—சாரங் தாளம்—ஆதி

எல்லோரும் ஒன்ருகக் கூடுவோம் அவன்
இதயம் குளிரக் கொஞ்சம் பாடுவோம் வருவீர் (எ)

சரணங்கள்

பொல்லாத வினைதன்னை சொல்லாமல் தீர்த்திடுவான்
பொன்னம்பலத்தான் பெற்ற சிங்கார வேலன் (எ)

மாயா உலகினிலே ஓயா வினைசூழ
மனமும் சஞ்சலமற தினமும் நலமுற (எ)

ஓராறுமுகம் கொண்ட ஈராறு கரம்கொண்ட
உமையாள் திருமகன் நம்மையாளவே வருவான் (எ)

50

ராகம்—பூரி கல்யாணி தாளம்—ஆதி

வரமருள் சிவன் உமை மகிழ் பாலகனே
வைரவேல் அணிந்திடும் வடிவேலனே
திருமயிலேறிடும் உயர் கோனே
தினமுனை திணையடிப் பணிவேனே
அறுமுகனே கண்ணன் மருகோனே
அமரரும் பணிந்திடும் அழகோனே
குறமகள் மகிழ்ந்திடும் குமரோனே
குருமலை அமர்ந்திடும் பெருமானே

## வள்ளி கல்யாண நாட்டிய நாடகப் பாடல்
## தினைப்புனத்தில் வள்ளி

ராகம்—பீலு தாளம்—ஆதி

ஆலோலம் ஆலோலம் ஆலோலமே
அன்புள்ள பறவைகளா ஆலோலமே
காடை குருவி மைனா இங்கே வந்து கடும்
துன்பம் தந்தாலே கவண் வீசுவேன்
சோ......சோ......சோ......சோ

## நாரதர் முருகனை பிரார்த்தித்தல்

ராகம்—நாத நாமக்ரியா தாளம்—ஆதி

*ஆறுமுகனே உந்தன் அடிப்பணிந்தேன்*
*அருள் புரிவாய் ஒரு வரம் தருவாய்*
*குறமகள் வள்ளியை மணம் புரிவாயே*
*குமரனே திரு விளையாடலினாலே*

## வள்ளியின் துயரம்

ராகம்—செஞ்சுருட்டி தாளம்—ஆதி

*காண்பதெப்போ முருகா உன்னையே நானும் (கா)*
*ஆண்டிடுவாய் என்று அல்லும் பகலும்*
*அடிப் பணிந்தேன் மிக ஆசையினாலே (கா)*

## வேடனாய் வந்த முருகனை தோழியர் விரட்டல்

ராகம்—நாத நாமக்ரியா தாளம்—மிஸ்ர ஆதி

*யாரைய்யா ஏனிங்கு வந்தீர் ஏதும்*
*அறியாதுப் போலே விழிக்கிறீர் இங்கே*
*ஏனைய்யா நிற்கிறீர் இன்னும் எங்க*
*ராசன் வரும் நேரம் ஆகுதே இப்போ*

## வேடன்

ராகம்—செஞ்சுருட்டி தாளம்—திச்ர ஆதி

*மானிங்கு வந்தது அம்மா அதை*
*தேடியே தானிங்கு நானும் வந்தேனே*
*ஏனின்னும் தாமதம் அம்மா மனம்*
*தாளேனே நான் அதை காணாமல் தானே*

## தோழியர்

ராகம்—உசேனி தாளம்—திச்ர ஆதி

மானும் இல்லை மயிலும் இல்லை
போமய்யா இங்கிருந்து
எம்மவர் வந்துவிட்டால் உன் பாடுதான்
தொல்லையாய் போகுமென்றேன்
சொல்வதும் புரியலையோ
வந்தவழி போமைய்யா போமைய்யா இங்கிருந்து

## வேடன்

சந்திரனும் சூரியனும் திசைமாறிப்
போனாலும் நான் போக மாட்டேனே
பெண்ண மயிலே உன்
தந்திரம் எல்லாம் இங்கு செல்லாது
ஆகையால் கொண்டோடி வா அந்த மானையே

## முருகன் வேங்கை மரமாதல்

## வள்ளி

ராகம்—பந்துவராளி தாளம்—ஆதி

உனதெண்ணம் நான் அறியேன் என
துள்ளம் வாழ் குமாரா
வினை ஏதும் அறியாத என்னையாள வருவாயே

## கிழவேடத்தில் முருகன்

ராகம்—உசேனி தாளம்—ரூபகம்

காதை அடைக்குது அம்மா பசியாலே
கண்ணும் சொருகுது அம்மா
தாகம் எடுக்குது அம்மா கிழப்
பிராணனும் போகுதம்மா

## வள்ளி

ராகம்—குந்தலவராளி தாளம்—ஆதி

தேனும் இருக்குது ஐயா தினைமாவும்
இருககுது இங்கே
தின்று களைப்பாறும் இளம் தென்றல்
அடிக்குது ஐயா

## கிழவர்

ராகம்—காபி தாளம்—ரூபகம்

தாகமும் தீர்ந்தது தங்கமே உன்மேல்
மோகமும் வநதது அன்னமே சுக
போகமும் வேண்டுதென் மனமே உந்தன்
சிநேகமும் தேடுதென் சொர்ணமே

## வள்ளி

ராகம்—மாயா மாளவம் தாளம்—ஆதி

பித்துப் பிடித்ததோ என் தாத்தா இந்த
பொல்லாத எண்ணம் உனக்கேனோ
சத்தம் ஒன்று நான் போட்டால் உன்னை
சதுரங்கம் ஆடுவார் எம்மவர் தாத்தா

## கிழவர்

ராகம்—நாட்டைக் குறிஞ்சி தாளம்—ஆதி

கோபம் எதற்கடி பெண்ணே மனஸ்
தாபம் எதற்கடி கண்ணே
கோமள வல்லியே நானே உன்னை
கல்யாணம் செய்யவே இங்கு வந்தேனே

## வள்ளி

ராகம்—பிலகரி தாளம்—ஆதி

தள்ளாதக் காலத்திலே தாத்தா இந்த
கல்யாண ஆசை உனக்காகுமோ
எள்ளி நகைப் பாரே தாத்தா உன்னை
ஏளனம் செய்வாரே தாத்தா

## கிழவர்

ராகம்—வசந்தா தாளம்—ஆதி

நீ என்ன சொன்னாலும் வள்ளி உன்னை
நான் விடமாட்டேனே கள்ளி
தனியே இருந்தால் துஷ்ட மிருகம் வந்து உன்னை
கொல்லும்

## வள்ளி

ராகம்—சரசுவதி தாளம்—ஆதி

பயமேதும் எனக்கில்லை தாத்தா எது
வந்தாலும் நான் அஞ்ச மாட்டேன்

## கிழவர்

உண்மையை சொல்லடி பெண்ணே உன்னை
இங்கு ஏதும் அசைக்காதோ கண்ணே

## வள்ளி

ராகம்—சுப பந்துவராளி தாளம்—ஆதி

யானையை கண்டால்தான் ஐயா என் மனம்
அஞ்சி நடுங்கவே செய்யும்

## கிழவர்

அண்ணா வந்தே அருளாயோ இந்த
வள்ளி மனம் கனியத்தானே

## கணபதி யானையாக வருதல்

## வள்ளி

ராகம்—மோகனம் தாளம்—ஆதி

ஐயையோ நான் என்ன செய்வேன்
யானை வருகுதே இங்கென்னைத்தேடி

## கிழவர்

சலங்காதே நான் அதை போய்விடச் செய்வேன்
என்னை
கல்யாணம் செய்வதாய் வாக்களிப்பாயே

(யானை மறைய வள்ளி சிரிக்கிருள்)

## வள்ளி

ராகம்—காபி தாளம்—ஆதி

ஏமாந்து போகலாமோ தாத்தா என்னை
யாரோ என்றெண்ணி நீரும்
பூமாலை போடலாமோ தாத்தா உன்னை
புருஷன் என்றழைக்கலாமோ

## கிழவர்

ஆபத்தில் காத்தேனே பெண்ணே அதற்
கடையாளமோ இந்த அநியாயம் கண்ணே
யானைவர வேண்டுமோ நீயும் அஞ்ச வேண்டுமோ
எந்தன் ஆசை நிறைவேற வழி இதுதானோ

## யானையை அழைத்தல்

ராகம்—சுப பந்துவராளி தாளம்—ஆதி

அண்ணா வந்தே அருளாயோ வள்ளி
என்னை மணம் புரியத்தானே

## யானை வருகிறது

ராகம்—காபி தாளம்—ஆதி

ஏமார்ந்து போகலாமோ பெண்ணே என்னை
யாரோ என்றெண்ணி நீயும்
பூமாலை போடலாமோ கண்ணே உந்தன்
பொன்னான கணவன் எந்தன் கையால்

## வள்ளி

### விருத்தம்

விதியோ முருகா சதியோ முருகா
கதிதான் இல்லையோ கருணாகரனே
இனி நான் உலகில் இருப்பதும் வீணே
உயிரை விடுவேன் உன்னை வந்தடைவேன்

(மூர்ச்சித்து விழுகிறாள்
சுய ரூபத்துடன் காக்ஷியளித்த முருகன்
வள்ளியை தேற்றுகிறார்)

## முருகன்

**விருத்தம்** — ராகம்—கேதார கௌளை

நெஞ்சிலே குடிக்கொண்ட என்னை
அங்கும் இங்கும் தேடி அலைந்ததும் ஏனோ
வஞ்சியே என் அருகில் வாராய்

### மங்களம்

தங்க மயில் வேலவனை மங்கை வள்ளி நாயகனை
எங்கும் நிறை பூரணனை என்றும்
நினைந்தவர் மங்களம் நித்ய மங்களம்



# ஸ்துதிமணி மாலை

முதல் பாகம் (இரண்டாம் பதிப்பு)

ராகலட்சண ஸ்வர தாள குறிப்புடன் கூடிய
51 பாடல்கள்

இயற்றியவர்
நீலா ராமமூர்த்தி

விலை ரூ. 2-50

இரண்டாம் பாகம் விரைவிலேயே
வெளி வருகிறது.

தபால் செலவு தனி

கிடைக்குமிடம்
நீலா பப்ளிகேஷன்ஸ்
9, ஸ்ரீனிவாசன் தெரு, மதராஸ்-28.



எம்மிடம் கிடைக்கும் இவ்வாசிரியரின் பிற நூல்கள்!



## கிருஷ்ண பிரேம கானம்

ஆண்டாள் நாட்டிய நாடகம்
பாடலுடன் கூடியது.

விலை ரூ. 1-25. தபால் செலவு தனி.



## பக்திப் பாடல்கள்

சீதா கல்யாண நாட்டிய நாடகப்
பாடலுடன் கூடியது.

விலை ரூபாய் 1-00

கிடைக்குமிடம்

நீலா ப்பப்ளிகேஷன்ஸ்
9, ஸ்ரீனிவாசன் தெரு, மதராஸ்-28.



### ப்ரஹ்மஸ்ரீ பாபநாசம் சிவன்
அவர்கள்

# கீர்த்தன மாலை

## இரண்டாம் பாகம்

101 கீர்த்தனங்கள்
மூன்றாம் பாகம்
(அச்சில்)



தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின்
நிதி உதவியுடன் வெளியிடப்பட்டது.

விலை ரூ. 8-00

